12th August 1965]

*Welcome addresses to political leaders by panchayats*

*129 *Q.*—SRI S. K. SAMBANDHAN : Will the Hon. the Minister for Local Administration be pleased to state—

(*a*) whether the Government are aware of the fact that the Panchayats are spending money in giving welcome addresses to political leaders;

(*b*) whether the Government have authorised the Panchayats to spend money on such welcome addresses; and

(*c*) if so, the amount that each Panchayat can incur on welcome addresses to leaders of political parties?

**கனம் திரு. எஸ். எம். ஏ. மஜீத் :** (அ) ஒருசில பஞ்சாயத்துக்கள் இவ்வாறு செய்துள்ளது அரசாங்கத்தின் கவனத்திற்கு வந்துள்ளது.

(இ) இல்லை.

(உ) இக் கேள்விக்கு இடமில்லை.

**திரு. எஸ். கே. சம்பந்தன் :** அந்த மாதிரி பஞ்சாயத்துக்கள் கொடுக்கக்கூடாது என்றிருக்கும்போது கொடுத்திருக்கிற பஞ்சாயத்துக்கள் மீது ஏதாவது நடவடிக்கை இதுவரை எடுக்கப்பட்டிருக்கிறதா ? எடுப்பதற்கு இனியாகிலும் அரசாங்கத்திற்கு உத்தேசமிருக்கிறதா ?

**கனம் திரு. எஸ். எம். ஏ. மஜீத் :** ஜில்லா அளவில் அவர்கள் பஞ்சாயத்து இன்ஸ்பெக்டர் என்ற முறையில் கலெக்டரிடம் அனுமதி வாங்கித்தான் ஆகவேண்டும். ஆனால் ராமனாதபுரத்தில் அதுமாதிரி சில பஞ்சாயத்துக்கள் சில அரசியல் தலைவர்களுக்கு வரவேற்பு அளித்தது என்று சர்க்கார் கவனத்திற்கு வந்தது. அதை கலெக்டர் பார்த்து முடிவு செய்யவேண்டியது.

**திரு. க. அன்பழகன் :** தலைவர் அவர்களே, அரசியல் தலைவர்களுக்கு பஞ்சாயத்து வரவேற்பு அளித்தால் முன்கூட்டியே அனுமதி பெறவில்லையென்றால் அதனால் ஏற்படுகிற செலவுகளுக்குத் தான் தலைவர் பொறுப்பேற்க வேண்டுமா ? முன்கூட்டியே செலவுக்கு அனுமதி வாங்காத மன்றத்தின் மீது நடவடிக்கை எடுக்கப்படுமா ?

**கனம் திரு. எஸ். எம். ஏ. மஜீத் :** பஞ்சாயத்து யூனியன் விதிகள் பிரகாரம் பஞ்சாயத்துக்களுக்கு கலெக்டர் மேல் அதிகாரி, முனிசிபாலிடியாக இருந்தால் சர்க்காரிடமே நேரடியாக அனுமதி வாங்கித்தான் செலவழிக்கவேண்டும். சர்க்கார் அனுமதி வாங்காமல் செலவழித்தால் தவறுதான்.

**திரு. க. அன்பழகன் :** தலைவர் அவர்களே, நான் கேட்கிற விளக்கம், சர்க்கார் அனுமதி இல்லாமல் செலவழிக்கப்பட்டால் செலவழிக்கப்பட்ட தொகையை பஞ்சாயத்துத் தலைவர் கொடுக்க வேண்டுமென்று இலாகா அதிகாரிகள் வற்புறுத்துவார்களா ? மாறாக வேறு விதமான நடவடிக்கை எடுப்பார்களா ?

[12th August 1965

**கனம் திரு. எஸ். எம். ஏ. மஜீத் :** இதில் பணம் சம்பந்தமான பிரச்னை மட்டும் அடங்கிவிடவில்லை. கொள்கை சம்பந்தப்பட்ட பிரச்னையும் அடங்கியிருக்கிறது. எதாக இருந்தாலும் நடவடிக்கை எடுக்க தயங்கமாட்டார்கள்.

**திரு. எஸ். கே. சம்பந்தன் :** அவ்வாறு வரவேற்பு கொடுப்பது இப்போது சர்வ சாதாரணமாகிவிட்டது, என்பது அரசாங்கத்திற்குத் தெரியுமா? அது அவசியம் இல்லாததால் அரசாங்கத்தினிடம் பர்மிஷன் வாங்கியும் கூட அதைச் செய்யக்கூடாது என்று அறவே தடைசெய்து உத்தரவு போட அரசாங்கத்திற்கு யோசனை உண்டா?

**கனம் திரு. எஸ். எம். ஏ. மஜீத் :** அம்மாதிரி உத்தேசம் எதுவும் இல்லை.

**திரு. க. அன்பழகன் :** தலைவர் அவர்களே, அமைச்சர்களுக்கு வரவேற்பு அளிக்கும்போது அனுமதி பெற்றுக்கொண்டுதான் வரவேற்பு அளிக்கப்படுமா? அனுமதி இல்லாமல் கூட அளிக்கப்படுமா?

**கனம் திரு. எஸ். எம். ஏ. மஜீத் :** மத்திய, மாநில அமைச்சர்கள், கவர்னர் போன்றவர்களுக்கு மட்டும் வரவேற்பளிக்க பணம் செலவழிக்கலாம், அதற்கு அனுமதி தேவையில்லை என்று ஏற்கனவே உத்தரவிருக்கிறது.

**திரு. க. அன்பழகன் :** தலைவர் அவர்களே, அமைச்சர்களுக்கு வரவேற்பு அளிக்க இந்த அளவு தொகை செலவழிக்கலாம் என்றும் மற்றவர்களுக்கு அந்த அளவுத் தொகை செலவழிக்க அனுமதியில்லை என்று அரசாங்கம் சொல்கிறதா? அந்தத்தொகை செலவழித்து வரவேற்பு அளிப்பதுதான் அரசாங்கத்தின் கொள்கைக்கு மாறுபட்டதா? அல்லது மற்றவர்களை வரவேற்பதே மாறுபட்டதா?

**கனம் திரு. எஸ். எம். ஏ. மஜீத் :** முன் அனுமதி பெற்று அவர்கள் செலவழித்துக் கொள்ளலாம். பஞ்சாயத்துக்கள் சம்பந்தப்பட்ட வரையில் அவைகளுக்கு பணவசதி இருக்கிறதா, பொதுச் செலவுகளுக்கு எல்லாம் போக வரவேற்பு அளிக்க போதுமான பணம் இருக்கிறதா, என்பதைக் கருதித்தான் அனுமதி அளிக்கப்படும்.

* 130 Q.—SRI S. K. SAMBANDHAN : Will the Hon. the Minister for Local Administration be pleased to state whether there is any provision for Municipalities and Panchayats to accord welcome addresses to political leaders?

**கனம் திரு. எஸ். எம். ஏ. மஜீத் :** மாண்புடைய பெரியார்கள் நகராட்சிகளுக்கு வரும் தருவாயில் அவர்களுக்கு வரவேற்பிதழ் அளிப்பதற்காகும் செலவை நகராட்சி மன்றம் அரசாங்கத்தின் அனுமதியுடன் ஏற்றுக் கொள்ள தமிழ் நாடு மாவட்ட நகராட்சிகள் சட்டத்தில் வகை செய்யப்பட்டுள்ளது. தமிழ் நாடு பஞ்சாயத்துச் சட்டத்தில் இத்தகைய ஷரத்து எதுவும் இல்லை. வரவேற்பிதழ்களை அளிப்பதற்காக உள்ளாட்சி மன்றங்களுக்காகும் செலவு